# "ஒற்றுமை"

"பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேராதார்."—*திருக்குறள்.*

புஸ்தகம் V
Vol. V

1925ஆ ஜூலைமீ

சஞ்சிகை 9
Issue 9

## தோத்திரம்

யானேபோய், என்நெஞ்சும் போய், என் அன்பும் போய்-
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே?
தேனே! அமுதே! கரும்பின் தெளிவே! தித்திக்கும்
மானே! அருளாய் அடியேன் உனை வந்துறும் ஆறே.
அழுகேன்! நின்பால் அன்பாம் மனமாய் அழல் சேர்ந்த
மெழுகே அன்னார் மின்னார் பொன்னார் கழல் கண்டு
தொழுதே உன்னைத் தொடர்ந்தாரோடுந் தொடராதே
பழுதே பிறந்தேன் என்கொண்டு உன்னைப் பணிகேனே?

(*மணிவாசகர்*)

# நாட்டு நடப்பு.

(Notes of the month)

இந்தியாவின் ராஜப்பிரதிநிதியாகிய ரீடிங் பிரபு ரஜாவில் இங்கிலாந்துக்குச் சென்றார். பெரும்பாலார் இந்தியாவுக்கு சுயராஜ்ஜியம் வாங்கிக்கொடுக்க மந்திரியைக் காணப் போயிருக்கிறார் என்றார்கள். இங்கிலாந்தில் இந்திய மந்திரியாகிய பர்க்கன்ஹெட்பிரபுவுடன் நெடுநாள் கலந்து பேசினார். சுயராஜ்ஜியம் வரப்போகிறதென்று எல்லாரும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். இந்த மாதம் ஏழாந்தேதி பர்க்கன்ஹெட் பின்வருமாறு அறிவித்தார்;"இந்திய கவர்ன்மெண்டாரையும் இந்திய சட்டசபையையும் கலந்த பின்புதான் முடிவு கூறமுடியும். பயமுறுத்தல்களினாலும், பலாத்காரத்தினாலும், சுதந்திரம் வாங்கிவிடமுடியாது. இப்பொழுதுள்ள அரசியல் முறையை சீர் திருத்தம் செய்ய வேண்டியது அவசியந்தான். ஆனால் இந்தியத் தலைவர்கள் இப்பொழுதுள்ள முறையை திருப்திகரமாய் நடத்திவைக்க முன் வந்து ஒத்துழைக்க தயாராயிருப்பதாகக் காட்டினால் தான் 1926-ம் வருஷத்திற்கு முன்பு சீர் திருத்தத்தைப் பற்றி யோசிக்க ஒரு கமிஷன் நியமிக்கப்படும்." ஒற்றுமையின் அவசியத்தை அவர் இடித்துக் கூறுகிறார். சீர்திருத்தத்தை நடத்தி வைத்து ஒத்துழைக்க வேண்டும் என்கிறார். நாம் ஒற்றுமையா யிருந்தாலன்றி நமக்கு சுயராஜ்ஜியம் ஒருநாளும் வாராதென்பது என்னுடைய துணிபு.

* * * *

சீனாவில் மாணவர் இயக்கம் இன்னும் அடங்கினபாடில்லை. பலப்பட்டு வருகிறதேயன்றி குறையவில்லை.

ரிப்புகளின் வெற்றி பலமாக விருக்கிறது. பிரான்ஸ் சமாதானத்துக்கு வேண்டிய ஏற்பாடு செய்தது. ஆனால் பிரான்ஸின் நிபந்தனைகளை ரிப்புகள் ஒப்புக்கொள்ளவில்லை. அவர்கள் சில நிபந்தனைகளை வெளியிட்டிருக்கிறார். அவை களுக்குட்படுவதாவென்று பிரான்ஸ் யோசிக்கிறது.

* * * *

தென்னாபிரிக்கா கவர்ன்மென்டார் இந்தியர்களுக்கு விரோதமாக ஒரு மசோதா கொண்டுவந்து முதல் தடவை யாக சட்டசபையில் நிறைவேறிவிட்டது. அதன்படி இந்தியர் இருப்பிடங்களையும், வியாபாரஸ்தலங்களையும் ஊருக்கு வெளியே தூரத்தி விடவும், இந்தியருக்கு நிலங்களை வைத்துக்கொள்ள உரிமையில்லாமல் செய்து விடவும் முடியும்.

* * * *

பஞ்சாப்சட்டசபையில் குருத்துவார மசோதா நிறைவேற்றப்பட்டது. அதனால் நாபாவில் அடைக்கப்பட்ட சீக்கியக் கைதிகள் விடுதலை செய்யப் பட்டனர்.

* * * *

சர்க்கார், இங்கே ஜெயிலிலுள்ள மாப்பிள்ளைக் கைதிகளையும் அவர்கள் குடும்பத்தாரையும் அந்தமான் தீவிலுள்ள மாப்பிள்ளைக் கைதிகளின் குடும்பத்தாரையும் அந்தமான் தீவுக்குச் செல்லும்படி தூண்டுவதுபோல் தெரிகிறது. இச்செய்தி கேட்ட முஸ்லீம்கள் ஒரு பொதுக்கூட்டம் கூடி அவருடைய செய்கையை கண்டித்தார்கள்.

பத்திரிகாசிரியர்.



# தேவஸ்தான பரிபாலனச் சட்டமும் சதிர்க் கச்சேரியும்.

இடம்: கோவில்.

காட்சி:—ஒரு தேவடியாள் கோவில் கணக்குகளை பரிசோதிக்க வந்திருக்கும் கமிஷனர் முன்பாக சதிர் ஆடுகிறாள்.

தேவடியாள்:—(*தாயைப்பார்த்து*):—*அம்மா! நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் உத்தியோகஸ்தர் யார்? நமது பட்டர்கள், தர்மகர்த்தர்கள், மானேஜர் கணக்குப்பிள்ளை யெல்லாரும் அவர்முன் கை கட்டி நிற்கிறார்களே! ஏன்? ஒருநாளுமில்லாத திருநாளா யிருக்கு.*

தாய்:—*ராஜம்! பின்னால் சொல்லுகிறேன். முதலில் உனது சதிரினால் அவரைக் கைவசப்படுத்து.*

தேவடியாள்:—*அவர் யாரென்று சொல்லு. பின்னால் மற்றச் சங்கதியைப் பார்த்துக் கொள்வோம். சொன்னால்தான் நான் ஆடுவேன். இல்லாவிட்டால் முடியாது.*

தாய்:—*அவர்தான் தேவஸ்தான கணக்குகளைப் பரிசோதிக்கப் புதிதாய் நியமிக்கப்பட்டிருக்கும் கமிஷனர். நம் ஐயா தர்மகர்த்தய்யா இருக்காரே. இதுவரைக்கும் மனம்போல செலவழித்து மனம்போல கணக்குச் சொன்னார்கள். இனிமேல் அதெல்லாம்நடக்காது. பொங்கல், புளியோதரை, பழங்கள் அவர் முன்பு வைக்கப் பட்டிருக்கிறது பார். கோவில் வரும்படியில் 100க்கு 1½ ரூபாய் வீதம் எடுத்துக் கொள்ளவே அவர் வந்திருக்கிறார். அவரை வசப் படுத்திவிடு. இல்லாவிட்டால் நம்முடைய வரும்படியிலும் 100க்கு 1½ வீதம் கேட்பார். என்ன செய்வது? யாரிடத்தில் பணமிருக்கு. காலக்ஷேபம் கழிவதே கஷ்டமாயிருக்கிறது. பஞ்சகாலம். ஜாக்கிரதையா யிரு.*

வீ.

# பொறுக்கு மணிகள்.

(TITBITS SELECTED).

பெண் ஆணுகமாறிய கதை :—துருக்கியில் கான்ஸ்டாண்டி நோபிள் நகருக்கருகில் அடாசாவென்னும் பட்டணத்தில் ஒரு பெண்மணி யிருக்கிறுள். அவள் பெயர் செபிமிஹாறூம். அவளுக்கு வயது 21. அவள் ஒரு பெண் பாடசாலை உபாத்தியாயினி வேலை பார்த்து வருகிறுள். அவள் சென்ற 14-வருஷ காலமாக தனது உடலில் ஆண் அவயவங்கள் விருத்தியாகிக் கொண்டு வருவதைக் கண்டு வந்தாள். ஆகவே கலியாணஞ் செய்துகொள்ளாமலிருந்து வந்தாள். நான் பெண்ணுயிருப்பேனு அல்லது ஆணுவேனுவென்று சதா சிந்தித்துக் கொண்டிருப்பாள். அவளுடன் கூடப் படித்தப் பெண்கள், இவளுக்கு ஆண் உணர்ச்சியிருப்பதைக் கண்டு, இவளை மோகிக்கவும் அன்பு பாராட்டவும் ஆரம்பித்தனர். இதையெல்லாம் கவனியாது அலக்ஷியம் செய்து வந்தாள். இவளைக் கலியாணம் செய்யவேண்டுமென்று விரும்பிவந்த புருஷர்களையும் வெறுத்தாள். மீசையும் தாடியும் வளர்ந்து வந்தன. அவைகளை க்ஷவரஞ்செய்து கொண்டு வந்தாள். கடைசியாக டாக்டரிடம் தன்னுடைய உடம்பை சோதனை செய்துகொண்டாள். பின்னுல் தன் பெயரை மாற்றிக் கொண்டு சயம்பே என்னும் ஆண் பெயரை வைத்துக் கொண்டாள். (பம்பாய் கிரானிக்கிள்.)

குழந்தை மேதாவி :—ஐந்து வயதுள்ள ஒரு பர்மியச் சிறுவன் விசேஷ மேதாவித் தனத்தைக் காட்டி வருவதாகப் பத்திரிகைகளி லிருந்து தெரியவருகிறது. ஜாவதி

நதிச் சங்கமத்தின் வாயிலுள்ள பூமியில் இச்சிறுவன் தாய் தந்தையர்களுடன் வசிக்கின்றானும். இவன் பெயர் டுன்பி யன். இவனது வாக்குத் திறமையையும் அறிவுச் சுடரை யுங்கண்டு சுற்றுப் பக்கத்திலுள்ளவர்கள் வியப்படைகின்ற னராம். பௌங்கிடே என்னுமிடத்தில் சமீபத்தில் இச்சிறு வன் ஒரு பெருங் கூட்டத்தில் ஒன்றரை மணிநேரம் விடா மல் பேசினானும். இவன் இப்பொழுது உள்ளூர் பிரதேசங் களில் சுற்றுப் பிரயாணஞ் செய்துகொண்டு ஜனத் திரள் களுக்கு புத்தமதத்தின் தருமத்தைப்பற்றிப் பேசிவருகின் ருனும். பேசும் நேரத்தைத் தவிர மற்றச் சமயங்களில் இதா சிறு பிள்ளைகளைப் போலவே விளையாடு கின்ருனும். இவனைச் சிலர் புத்த அவதாரமென்றே கருதுகின்றன ராம். (தமிழ்நாடு.)

தோந்திபருத்தலும் உன்மையில் ஓர் வியாதியே:—ஒரு ஊரில் தொந்திப்பிரபு ஒருவர் வசித்துவந்தார், அவர் தொந்தியில் பலவித மடிப்புகளுண்டு. அவர் கையில் வைத் திருந்த எலுமிச்சங்கனி யொன்று தவறுண்டு எவ்விதமா கவோ தொந்தி மடிப்பினுள் நுழைந்து கொண்டது. சில தினங்கள் சென்றதும் அக்கனி அழுகவாரம்பித்து நீர் வடி யத் துவங்கியது. அதைக்கண்ட பிரபு தொந்தியில்நீர்மே கம் வந்ததென்றெண்ணி தக்க வைத்தியருக்கு ஆளனுப்பி னர். வைத்தியர் வந்ததும் சில கேள்விகள் கேட்டுவிட்டுப் பரிசோதிக்கும் பொருட்டு தொந்திமடிப்பைப் பலமாக நீக் கிப்பார்த்தார். அழுகிப்போயிருக்கும் எலுமிச்சங்கனியைக் கண்டார். பிரபுவைப்பார்த்து "ஐயா! பிரபுவே உமது தொந்தியில் வந்தது நீர்ரோகமன்று,எலுமிச்சங்கனி ரோக' மெனச் சொன்னர். பிரபு விழித்து "என்ன ஐயா! வைத்

தியரே! எலுமிச்சங்கனி ரோகம் ஒன்றிருப்பதாக நான் கேள்விப்பட்டதில்லையே" வெனச் சொல்லவும் அழுகிப் போயிருந்த கனியை எடுத்துப் பிரபுமுன் வைத்தார் வைத்தியர். அதைக்கண்டு அங்குள்ளாரனைவரும் ஆச்சரியமடைந்தனர். தொங்கிப்பிரபு அவமான மடைந்தார்.

(ஊழியன்).

ஜனத்தொகையை அதிகப்படுத்த ஒருவிபரீத யோசனை:— பிரான்சு தனது ஜனத்தொகையை அதிகப்படுத்துமாறு பெரிய வேலைகள் செய்தாலன்றி இன்னும் இருபது வருஷத்திற்குள் பிரெஞ்சு ஜாதியே அழிந்துபோய்விடுமென்று டாக்டர் பால் கார்நட் கூறுகிறார். பிரான்சில் இருபது லட்சம் மாதர்கள் கலியாணமின்றி யிருக்கிறார்களாம். மகாயுத்தத்தில் ஆண்கள் இறந்துபோனதால், இவர்களுக்குப் புருஷர்கள் இல்லையாம். ஐரோப்பாக்கண்டம் முழுமையும் ஆண்களைவிட ஒன்றரைக்கோடி பெண்கள் அதிகமாயிருக்கிறார்கள். பிரஞ்சு பெண்களை அந்நியர்களுக்குக் கொடுக்கக்கூடாதாம். புருஷர்கள் ஒன்றுக்கு அதிகமான மனைவிகளை வைத்துக்கொள்ளும்படி விடவும் வழியில்லையாம். ஆனால் கலியாண மென்பதின்றி ஸ்திரிகள் பல புருஷர்களுடன் கூடிப் பிள்ளைகள் பெற்று வாழும்படி விட்டுவிட வேண்டுமாம். பிள்ளைகளுடன் வாழும் தாய்மார்களுக்கு அரசாங்கத்தார் பிள்ளைகளின் எண்ணிக்கைக் கேற்றவாறு ஆதரவளிக்க வேண்டுமாம்.

(லோகோபகாரி).

குட்டையான மனிதன்: 20 அங்குல உயரம்:—சென்ற மாதம் 18-ந்தேதி கொழும்பு கோட்டைக்குள் இருபது அங்குல உயரமுடைய ஒரு மனிதன் வெளியானன். அவனைப் பார்க்கிறதற்கு ஒரு பெருங்கூட்டம் ஜனங்கள் சேர்ந்

தார்கள். இவ்வளவு சிறிய ஒரு மனிதனைக் காண்பது எல்லோருக்கும் பெரும் நூதனத்தைக் கொடுத்தது. இவன் கப்பலிலிருந்து கரையில் இறங்கினது முதல் ஜனங்கள் பெருங்கூட்டமாகச் சேர்ந்தமையால் போலீஸார்கள் ஜனங்களை விலக்கத் தொடுத்தார்கள். ஜனங்கள் போலீஸாரைக் கவனியாது ரோட்டை நிரப்பினர். அத்தோடு ஐரோப்பிய போலீஸ் கூட்டம் வெளியாகி ஜனங்களை அதிகக் கஷ்டத்துடன் கலைக்கமுயன்றனர். அதுவும் முடியவில்லை. போலீஸ் சூப்பரின்டென்டென்டுகளும் வந்து ஜனங்களை விலக்கினார்கள். இச்சிறு மனிதனைப் பார்த்தவர்களெல்லாம் புதினப்பட்டார்கள். இந்த புதுமையை ஜனங்களைப் பார்க்கவிடாமல் போலீஸார் செய்த கிரியை பெரு மனவருத்தம்.

இவன் பேசுவது பிரான்சு பாஷை. போலிஸ்காரர் ஜனங்களை விலக்கியதைப்பற்றி துதி செலுத்தினான். இவன் இங்கிலீஷ் பாஷையும் சொற்பம் பேசுகிறான். இவனை தாமஸ்குக் துரைமக்களின் ஷாப்பு வரையிலும் கொண்டுபோகப் பட்டது. அந்த ஷாப்பில்போய் ஒரு நாற்காலியின் மேல் குரங்கைப்போல் ஏறி யுட்கார்ந்திருந்து இவன் கையிலிருந்த ஒரு செக்கை மாற்றும்படி கொடுத்தான். அந்த நேரத்தில் அவனிடம் உன்பேர் என்ன வென்று கேட்கப்பட்டபோது என்பேர் ஜோ என்றும், ஆஸ்திரேலியாவில் பத்துமாசக்காலமிருந்துவிட்டு என் சுயதேசமாகிய இத்தாலிக்குப்போகிறேனென்றும், நான் போகுங் கப்பல் ஒசோலா என்றும் சொன்னான். நீ என்ன பிழைப்புச் செய்கிறாய் என்று கேட்டபோது 'நான் குதிரையிலேறிச் சவாரி செய்கிறவன். எனக்குப் பன்னிரண்டு வயதான போதிலிருந்து நான் அத்தொழிலைத்தான் செய்கிறேன். என்னுடைய காலமெல்லாம் குதிரைமேலேயே சென்றது' என்று பதில் சொன்னான். உனக்கு 12 வயதா யிருக்கும்பொழுது இப்போதி

ருப்பதிலும் சிறிதாக இருந்திருப்பாயே? என்று கேட்ட போது, ‘ இல்லை நான் பருத்துக் கொழுத்திருந்தேன். இன்னும் பருப்பேன் என்று எண்ணியுங் கொண்டேன். என்னுடைய குதிரை விரைவாய்க் குதித்தோடும்போது நான் யாதொரு பயமுமில்லாமல் அதன் மேல் தைரியமாய் உட்கார்ந்திருப்பேன். நான் இத்தாலிய தேசத்தில் இத்தாலிய இராஜ குமாரத்தியின் எதிரிலும், ஜர்மனிய தேசத்தில் ஜர்மனிய முடிக்குரிய குமாரனின் குமாரத்தியிடத்திலும் யுத்தத்துக்கு முன் ருஷிய தலைப்பட்டணத்தில் ருஷிய பிரபுக்களிடத்திலும் குதிரைமேலேறிப் போயிருக்கிறேன். என்னுடைய வயது 32 ஆகிறது. என்னுடைய நெஞ்சின் அகலம் 33 அங்குலம். என் உயரம் 20-அங்குலம். என்று சொன்னான். இவன் ஜர்மனியில் பத்து வருடம் தங்கியிருந்திருக்கிறான். ஐந்து பாஷைகளைப் பேசப் பழகியிருக்கிறான். ரிக்ஷாக்களைக் கண்டால் அவைகளில் பயமில்லாமல் பாய்ந்து எதிக்கொள்ளுகிறான். இவன் அதிக கட்டை மனுஷனாயிருந்தாலும் நெட்டை மனுஷரைப் பார்க்க கெட்டிக்காரனாயிருக்கிறான். “இஸ்லாம் மித்திரன்”

---



# சுகாதாரத் துணுக்குகள்.

## NOTES ON HEALTH

நாகரிகத்தால் ஏற்பட்ட வியாதிகளில் சிறந்தவை: க்ஷயரோகமும் பிளவையும். இவ்விருவகை வியாதிகளினால் மரணமடைவோர் எண்ணில் அடங்கா. இவ்வியாதிகளை நாம் ஆகார முறைமையினாலும் இயற்கை வாழ்க்கையினாலும் தடுக்கலாம்.

* * * *

சரீர சர்மத்தை சரியாய் பதனிட்டு வைத்துக்கொண்டால் சரீரம் அழகாயிருப்பதோடு ஜீரணக் கருவிகள் நன்றாய் வேலைசெய்யும். சர்மம் நல்ல நிலைமையிலிருந்தால் நாம் சிரஞ்சீவிகளாய் வாழலாம். 'வைத்தியனுக்குக் கொடுப்பதை வாணியனுக்குக் கொடு' என்பது பழமொழி. நமது முன்னோர்கள் எண்ணெய் ஸ்நானத்தை சரீர ஆரோக்கியத்துக்கு இன்றியமையாததாக வைத்ததற்குக் காரணமில்லாமலில்லை. எண்ணெய் தேய்த்துக் கொள்வதனால் சர்மம் பதனடைந்து சுறுசுறுப்பாகவுமிருக்கிறது. தற்காலத்தில் சோப்பை உபயோகிக்கிறார்கள். அதைப்போல் சர்மத்துக்குக் கெடுதி செய்வது வேறொன்றுமில்லை. ஏனெனில் சோப்பை உபயோகிப்பதனால் எண்ணெய்ப் பசை போய் விடுகிறது.

* * * * *

எலுமிச்சம் பழத்தை ஒருவன் தவறாமல் சாப்பிட்டு வந்தால் நீண்டகாலம் வாழக்கூடும் என்று ஒரு வைத்தியர் சொல்லுகிறார். அது உண்மையே. எலுமிச்சம்பழ ரசத்

யதைப் பானம் பண்ணிவந்தால் குஷ்டம் நீங்கு மென்றால் வேறு எந்த வியாதி தீராமல்போகும்? டிப்தீரியா, ஜன்னி, மலேரியா முதலிய ஜுரங்கள் எலுமிச்சம் பழத்தால் தடுக்கக்கூடும். எலுமிச்சம்பழ ரசத்தை தலையில் தடவினால் பொடுகு ஏற்படுவது நீங்கும். ஸ்தூல சரீரத்தைக் குறைத்துக் கொள்ளவேண்டுமென்றால் அது கைகண்ட மருந்தாம். அது ரத்தத்தைச் சுத்தப்படுத்துமென்பது யாவரும் அறிந்த உண்மை.

* * * * *

'லங்கணம் பரமௌஷதம்.' ஒருவனுக்கு வியாதியில்லை இருக்குமென்பதை அறிவதற்குச் சிறந்த அறிகுறி அவனுக்கு ஏற்படும் பசி. பசி உண்டானால் வியாதியில்லை. பசியில்லையென்றால் அவனுக்கு வியாதியுண்டு. வியாதியிருந்தால் பசி வருகிறவரை ஆகாரம் உட்கொள்ளாமலிருப்பது உத்தமம்.

* * * * *

தம்பதிகள் சரீர ஆரோக்கிய முள்ளவர்களாகவும் சந்தோஷமாயும் இருக்கவேண்டுமானால் ஸ்திரீகள் புருஷர்களை விட 10-வருஷம் இளமைப் பருவத்தினராக இருக்கவேண்டுமென்று ஒரு ஆங்கில வைத்திய நிபுணர் அபிப்பிராயப்படுகிறார். நம் நாட்டிலும் பண்டை வழக்கம் அஃதே.

* * * * *

நம் சரீரத்துக்குவேண்டிய ஆகாரம் இவ்வளவுதான் இருக்கவேண்டுமென்று அளவாகச் சொல்ல முடியுமா வென்று என் நண்பரில் ஒருவர் என்னைக்கேட்டார். அதை வரையறுத்துச் சொல்லுவது அசாத்தியம். ஆனால் இரண்டொரு நிபந்தனைகள் சொல்லலாம் என்றேன். நம்முடைய

ஆகாரம் நம் சரீரத்தின் அளவுக்குத் தக்கபடி இருக்கவேண்டும். நமக்கு இருந்தவரும் பசிக்குத் தகுந்தபடி ஆகாரம் உட்கொள்ள வேண்டும். ஒட்ட சாட்டமுள்ளவர்களுக்கு அதிக ஆகாரம் உட்கொள்ளவேண்டியிருக்கும்.

* * * * *

படுக்கையிலிருந்து படிப்பது கண்ணுக்குக் கெடுதல் என்று இதுவரை கருதப்பட்டு வந்தது. ஆனால் அவ்விதம் எண்ணுவது தவறு என்றும் வெளிச்சம் சரியாயிருப்பின் எப்படியிருந்தும் படிக்கலாமென்றும் ஒரு வைத்திய நிபுணர் கண்டுபிடித்திருக்கிறார்.

* * * * *

சரீரத்தை நல்ல நிலைமையில் வைத்துக் கொள்ளுவதற்கு நவரத்தினங்கள் போன்று ஒன்பது விதிகளிருக்கின்றன. அவ்விதிகளின்படி ஒருவன் சரிவர நடந்து வருதால் நெடுநாள் வாழக்கூடுமென்பது அறிவாளிகளுடைய துணிபு. முதலாவதாக நல்லசத்துள்ள உணவை சாப்பிடவேண்டும். இரண்டாவது நமது சரீரத்தைச் சரியான வழியில் உபயோகிக்கவேண்டும். அதாவது நல்ல நடத்தையுடன் இருக்க வேண்டும். நல்லெண்ணத்துட னிருக்கவேண்டும். நற்சிந்தனையுடனிருப்பின் வியாதியே வாராது. இரண்டாவது நல்ல காற்றை வாயின் வழியாகச் சுவாசிக்காமல் நாசித் துவாரங்களின் வழியாகச் சுவாசிக்கவேண்டும். மூன்றாவது சுத்தமான நீரே நமக்கு ஏற்றபானம். அதுவே சிறந்தமருந்தே. நான்காவது மிதமான ஆகாரத்தை உட்கொள்ளவேண்டும். பசியிருந்தாலொழிய உணவு எடுக்கக் கூடாதென்று வைராக்கியமா யிருக்கவேண்டும். ஐந்தாவது தேகப்பயிற்சி செய்யவேண்டும். அதிலும் அளவாயிருக்க

வேண்டும். ஆறுவது சரீரத்தைச் சுத்தமாய் வைத்துக் கொள்ளவேண்டும். ஏழாவதாக ஒழிவு காலங்களை உல்லாசமாகவும் வேலை விஷயத்தை அடியுடன் மறந்தும் காலத்தைக் கழிக்கவேண்டும். இது நம்மவர்களில் அநேகருக்கில்லை. மேல்நாட்டார்களுக்கும் நமக்கும் இதுதான் வித்தியாசம். எட்டாவதாக நன்றாக நித்திரை செய்யவேண்டும். கடைசியாக கவலையற்றும் பயமற்றும் துயரமற்றும் கடவுளை நினைத்தும் அவர் பேரில் பாரத்தைப் போட்டுவிட்டும் தூங்கவேண்டும்.

விரபாத.

---

# விகடக் கூற்றுகள்.

1. விருந்தாளிகளிலொருவன் :—சாப்பாட்டு ராமன்களெல்லாம் விருந்துக்கு வந்து விட்டார்களா?

வேலைக்காரன் :—இல்லை ஐயா, நீங்கள்தான் முதல்.

* * * * *

2. நோயாளி இரவெல்லாம் உறக்கமின்றிப் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தான். காலையில் வைத்தியர் வந்து "நேற்று மருந்து சாப்பிட்டாயா?" என்று கேட்டார். "இன்னும் இல்லை. தூங்கப் போகும்பொழுது அதைச் சாப்பிடச் சொன்னீர்கள். எனக்கு இன்னும் தூக்கம் வரவில்லை" என்றான்.

* * * * *

3. உபாத்தியாயர் :—பாலைவனம் என்பது ஒன்றும் முளையாதவிடம். நமது தேசத்தில் பாலைவனங்களிருக்கின்றனவா?

ஒரு பையன் :—அநேக மிருக்கின்றன.

உபாத்தியாயர் :—ஒன்று சொல் பார்ப்போம்.

பையன் :—எங்கள் பாட்டனாருடைய தலை.

* * * * *

4. ஒருவன் மயிர் வெட்டும் 'சலூன்' ஒன்றிற்குள் புகுந்து "இங்கே என்ன சார்ஜ்" என்று கேட்டான். முதலாளி "மயிர் வெட்டுவதாயிருந்தால் ஆறணா, க்ஷௌரம் செய்வதாயிருந்தால் இரண்டணா" என்றான். உடனே அவன் தன் தலைப்பாகையை தூக்கிவிட்டு "என் தலையைச் க்ஷௌரம் செய்" என்று கூறி ஒரு நாற்காலியி லுட்கார்ந்தான்.

* * * * * *

5. புருஷனும் பெண்சாதியும் பணத்தைப் பற்றிச் சண்டை இட்டுக் கொண்டார்கள்.

புருஷன் :—நீ எப்பொழுது பார்த்தாலும் எதாவதொன்று வேண்டுமென்று பணம் கேட்டுக் கொண்டேயிருக்கிறாய். பணம் மரத்தில் காய்க்கிறதா? நான் இறந்துவிட்டால், காசு பிச்சை எடுப்பாயோ ?

மனைவி :—"இப்பொழுது போல் அப்பொழுதும் பிச்சை எடுத்தால் என்ன கெட்டுப் போச்சு?"

* * * * *

6. நியாயஸ்தலத்தில் விசாரணை நடந்து கொண்டிருந்தது.

நியாயாதிபதி :—நீ சுவரை எப்படி எறிக் குதித்தாய்?

குற்றவாளி :—சாமி, நீங்கதான் குட்டிச்சுவர் என்ணு—நியாயாதிபதி—போதும், நிறுத்து.

திரு. க. ராஜசேகரன், M.A.,

**CHILDREN'S CORNER**
சிறுவர் பக்கம்

# தாயின் அன்பு.

# MOTHER'S LOVE.



அன்னை தன் அன்பை அறைகுவேன் கேளாய்!
ஈயே மொய்க்கினும் எறும்பே சுற்றினும்
நோயே காணினும் நொடியே நேரினும்
அழுகை ஒன்றே அதன்மொழியாகத்
தழுவிய சேயாச் சாரும் நாளில்
அவ்வக்காலத்து அதனதன் குறிப்பைச்
செவ்விதாகத் தெரிந்தே யாற்றியும்
அந்தக் குழந்தை அடைந்திடும் நோய்க்காத்
தந்திடு மருந்தைச் சார்புடன் கொண்டும்
உப்பே யில்லா உணவினை யுண்டும்
கப்பிய இரவெலாம் கண்விழித் திருந்தும்
உடல்நோ தன்னுடன் உள்ள நோய் கொண்டும்
விடலில் அன்பு மேலும் மேலும்
குலவும் அன்னை தன் குணங்கள் முற்றும்
நிலவும் வகையால் நிகழ்த்தவும் படுமோ.

*Selection from 'Prithwiraj'*
by C. R. Namasivaya Mudaliyar.

# பெண்மக்களின் அறிவும் ஆண்மையும்.

(நாகை திரு. நீலாம்பிகையம்மை எழுதியது).

" மக்கள் தாமே ஆறறிவு உயிரே " தொல்காப்பியனார்.

மக்களெனப்படுவார் ஆண்பாலாரும் பெண்பாலாரும் ஆவர். இவ்விரு வகுப்பினரையும் அறிவினால் ஒன்று படுத்தி மக்கள் என்னும் ஒரு பெயர் தந்தார் ஆசிரியர் தொல்காப்பியனார். நல்லது இது, தீயது இது என்று பகுத்துணரும் ஒரு சிறந்த உணர்வு அதாவது மன அறிவு ஆண் பெண் என்னும் இருதிறத்தார்க்கும் இயற்கையில் அமைந்து கிடக்கின்றது. இவ்வறிவு ஆண் பெண் என்னும் இருவருக்கும் பொதுவாகும். அறிவு எல்லார்க்கும் பொது என்பது விளங்குதற்காகத்,

" தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு. "

என்று திருவள்ளுவர் கூறியதில் மாந்தர் கற்கும் அளவுக்கு ஏற்ப அவர்க்கு அறிவு மிகும் என்பது பெறப்படுமே யன்றி, அறிவு ஆண்மக்கட்கு மிகுந்துள தென்றேனும், பெண் மக்கட்குக் குறைந்துள தென்றேனும் ஒரு குறிப்பு அதிற் பெறப்படுமாறில்லை. இன்னும் அறிவிற் சிறந்த ஔவையாரும் " தாம் கற்ற நூலளவே யாகுமாம் நுண்ணறிவு " என்று பொதுப்படக் கூறுகின்றார்.

' சமஸ்கிருத ' நூல்களிலெல்லாம் பெண் மக்கள் மிகவும் தாழ்த்தப்பட் டிருக்கின்றார்கள். 'காசிகாண்டம்' 'மநுஸ்மிருதி

முதலான நூல்களிற் பெண்மக்கள் விலங்கினுங் கடைப்பட்டவர்களாய்க் கருதப்பட்டிருக்கின்றனர். இவர்கட்கென ஓர் உரிமையுங் காட்டப்படவில்லை. ஆண்மக்கள் எப்படிப்பட்ட தீய இயல்புடையராயிருப்பினும் அவர் தாம் உயர்ந்தவர், பெண் மக்கள் எவ்வளவு உயர்ந்தவராயிருப்பினும் அவர்கள் அத்தீயவர்கட்கு அடிமைகளே யாவர் என்பது முறை தவறி எழுதப்பட்டிருக்கின்றது.

ஆனால், நம் பண்டைத் தனித் தமிழ் நூல்களிலோ ஒன்றிலேனும் பெண்பாலாரைக் குறைத்துக் கூறும் ஒரு சொல்லேனும் ஒரு சொற்றொடரேனும் மருந்துக்கும் அகப்படா. ‘தொல்காப்பியம்’, ‘இறையனாரகப் பொருள்,’ ‘திருச்சிற்றம்பலக்கோவையார்’ முதலான ஒப்புயர்வற்ற நூல்களிற் பெண்மக்கள் தலைவியர் எனவைத்துக் கூறப்படுதலும், பெண்மக்களில் நுண்ணறிவுடைய புலவர் பலர் சொற்சுவை, பொருட்சுவை, நிறைத்துப் பாடிய பாக்கள், ‘புறநானூறு’ ‘கலித்தொகை’ முதலான அரும்பெரு நூல்களில் சேர்க்கப்பட்டிருத்தலும் பாகுபாடின்றி ஆண்பாலாரிற் போலே, எழுநூறாண்டுகளாகச் சமஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்த்த தமிழ் நூல்களிலும், அவை தம்மைப் பின்பற்றி எழுதிய தமிழ் நூல்களிலும், பெண்மக்களைக் குறைத்துப் பேசும் முறைபிறழ்ந்த உரைகளையே கடைப்பிடியாகக் கொண்டு தத்தமக்குத் தோன்றியவாறெல்லாம் பெண்மக்களை மிக இழித்துப் பேசித் தமது இழிப்புரைக்குத் துணையாக,

> “ நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும்
> பெண்ணறிவென்பது பெரும் பேதமைத்தே.”

என்ற யாரோ கட்டிவிட்ட ஒரு விடுதிச் செய்யுளையும் எடுத்துக் காட்டித் திரிகின்றனர். இச்செய்யுளியற்றிய ஆண்மகனார்,

தம் செய்யுளின்கணுள்ள 'பேதைமை' என்ற சொல்லிற்குப் பொருள் அறியாமை என்று கொண்டார். மற்ற ஆசிரியர் நக்கீரனாரோ பேதைமை என்பது "கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை" என்று 'இறையனாரகப் பொருள்' உரையில் எழுதியிருக்கின்றார். பேதைமை என்ற சொல்லப்படுவது சான்றோரால் அறிவுறுத்தப்பட்ட அரும் பெரும் பொருள்களைத் தம் உள்ளத்தே அடக்கிவைத்து அவை தம்மை அறியார் போன்று ஒழுகி, வேண்டும்போது வெளிப்படுத்தும் மகளிரின் இயற்கையாகும். தம் தாய், தந்தையர், கணவர், பிள்ளைகள், உடன்பிறந்தார், சுற்றத்தார் என்னும் இவர்கள் திருத்தமான வழியில் ஒழுகி அறிவுடையராயிருக்கும்போது மகளிர் தம் அறிவை வெளிக்காட்டாமலும், அங்ஙனமின்றி அவர்கள் பிசகி நடக்கும்போது தம் அறிவை வெளிக்காட்டியும் அவர்களுக்கு நல்லறிவு புகட்டுவர். ஆதலாற் பேதைமை என்பது அறியாமையாதல் எங்ஙனம்? "பேதைமை என்பது மாதர்க்கணிகலம்" என்ற ஔவையார் திருமொழியின் நுட்பமும் உற்று நோக்கற்பாலதாகும். அணிகலன்கள் மகளிரால் எந்நேரமும் அணியத்தக்கன அல்ல; பொதுவான நாட்களில் கழற்றிவைத்துச் சிறப்பு நாட்களிலேயே அவை அணியத்தகுவனவாம். அது போல், 'பேதைமை' என்னும் தன்மையும் மகளிரால் வேண்டும் போது கைக்கொள்ளத்தக்க தொன்றும்.

இனி, முற்காலத்தில் பெண்மக்களெல்லாரும் கல்வி அறிவின்றி விலங்குகளைப் போலிருந்தார்கள்; இப்போதுதான் ஒரு சிலர் கல்வி கற்கின்றார்களென்று பழைய கால உண்மையறியாதார் பலர் ஆங்காங்குப் பேசுகின்றனர். இதனை ஒரு சிறிது ஆராய்வோம். முற்காலத்திருந்த பெண்மக்கள் கல்வியறிவின் மிக்கவராகவே இருந்தார்கள். பண்டைக் காலத்திற்கும் இக்

காலத்திற்கும் நடுப்பட்ட காலத்தில் தமிழ் அரசு மாறுபட்ட போதுதான் பெண்பாலாரது கல்வி சுருங்கியது. அப்போது திருக்கர் வந்து தமிழ் நாட்டைக் கைப்பற்றத் துவங்கிச், சண்டையிட்டதனால் தமிழ் நாடும் தமிழர்களும் பெரிதும் அலைப்புண்டு தம் உரிமையெல்லாம் முற்றும் இழந்தனர். சிறந்த பண்டைத்தமிழ் நாகரிகமும் அப்பைப்பையக் குறைந்தொழிந்தது. "மாதவர் நோன்பும் மடவார் கற்பும், காவலன் காவலின்றித் தங்கா" என்று இளங்கோவடிகள் கூறியதற்கிணங்க நந்தமிழ்ப் பெண்மக்களெல்லாரும் தத்தம் வீடுகளாகிய சிறைச்சாலைகளில் அடைக்கப்பட்டு அறியாமைக்கு ஒரு புகலிடமாகிக் கல்விபயி வின்றி யிருந்தனர். ஐயகோ! அக்காலந்தொட்டு ஆண்பாலார்க்கு இவர்கள் அடிமைகளானதுமன்றி அவர்கள் கொடுமைக்கும் ஆளாயினோர்கள்! ஆனால் இக்காலத்திலோ ஆங்கில அரசின்கீழ் வாழும் பாதர்கள் பண்டைத் தமிழ்ப்பெண்மக்களைப்போற் கல்வி நலம் பெறுவதற்கு இடம் வாய்த்திருக்கின்றது.

இக்காலந்தொட்டு ஒப்பிலே, இரண்டாயிர ஆண்டுகளுக்கு முன்னே கல்வியிற்சிறந்த பெண்மக்கள் அறுபத்தைந்து பெயர்களின் தீஞ்சுவைத் தனிப்பாடல்கள் பழைய தனித்தமிழ் நூல்களிற் காணப்படுகின்றன. அவ்வழிவுடைய பெண்மணிகளில் ஒரு சிலரைக் குறிப்பிட என் மனம் விழைகின்றது. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்னும் ஓர் அரசர் பெருமான் பாண்டி நாட்டை மிக்க திறமையோடு அரசாண்டு வந்தான். இப் பூதப்பாண்டியன் பெரும் புலவனும் ஆண்மையிற் சிறந்தவனுமாவன் என்பது 'அகநானூற்றிலும்' 'புறநானூற்றிலும்' இவன் செய்த அகவற்பாக்களால் நன்கு விளங்கும். இத்தகைய பாண்டியனது மனைவியாகிய பெருங்கோப்பெண்டு தன் கணவனைப் போலவே புல

மைமிக்கவளும் அறிவிற் சிறந்தவளுமாயவள். நன்மையொத்த கல்விப்புலமையுடைய தன் இன்னுயிர்த் துணைவியாகிய இப் பெருந்தேவியிடத்து அரசன் எவ்வளவு அன்புடையனாயிருத்தல் வேண்டும்! இவ் இருவர் தம் ஒத்த அன்பையும், புலமையையும் இன்பவாழ்க்கையையும் கூற்றுவன் காணப்பொறுனுப் பாண்டியன் உயிரைக் கொள்ளை கொண்டேகினன்; அது கண்டு அரசன்மாட்டுப் பேரன்புவைத்த பெருந்தேவி கொண்ட கொடுந்துயரம் கரைகடந்து செல்வதாயிற்று! பாண்டியனது புகழ்பெற்ற உடம்பானது பெருஞ் சிறப்போடு இடு காட்டில் வைக்கப்பட்டுத் தீப்பற்றி எரியும்போது, உடன் வந்த பெருந்தேவி தன் ஆருயிர்க்காதலனோடு தீப்பாய்ந்து இறத்தலே தனக்குப் பேரின்பம் தருவதாம் என்று நினைத்துத் தீப்புகுதற்கு எரியை நோக்கி முற்சென்றபோது, அவள் நண்பராகிய 'மதுரைப் பேராலவாயர்' முதலான சான்றோர்கள் அவளைத் தீப்புகாவாறு பன்முறை வேண்டித் தடுத்தனர். அதுகண்டு அத்தேவி அச்சான்றோர்களை நோக்கிப்,

"பல்சான்றீரே பல்சான்றீரே
செல்கெனச் சொல்லா
தொழிகென விலக்கும்"

என்ற அகவற்பாவைத் திடீரெனப்பாடித் தீப்பாய்ந்தனள். நாம் பல ஆண்டுகள் முயன்று கற்றுத் தேர்ந்த பிறகுதான் செய்யுட்கள் இயற்றல் இயலும். பெருந்தேவியோ தான் நினைத்தபோது உடனே செய்யுளியற்றும் ஆற்றல் வரப்பெற்றிருந்தமையின், இவள் பெரிதும் கல்வியிற்றேர்ந்து செய்யுள் அமைப்பதில் நன்கு பழகினவள் என்பது தானே விளங்கும். இவ்வரசி தான் பெருஞ் செல்வ வாழ்க்கையில் அமர்ந்திருந்த போதும்

சொப்பனமுற்று வருத்திப் பல நூல்களைக் கற்றுத் தான் நினைந்த வையதெல்லாம் செய்யவியற்றத் தக்க அறிவுடையனா யிருந்தனன்.

இன்னும் ஒன்று இங்கே நுணுகி உன்னிக்கற்பாலது. முற்காலத்தில், கணவன் இறந்தால், அவன் உடல் சுடுகாட்டில் எரியும்போது, அவன் சுற்றத்தாரெல்லாம் வலிந்து கொண்டு போய் அவன் மனைவியையும் உயிருடன் அவனோடு சேர்த்து எரிப்பது நம் நாட்டில் வழக்கமாயிருந்ததென்பர், அக் கொடிய வழக்கத்தினை அறியார் இரக்கமும் மிக்க நல் ஐரோப்பியர் நிறுத்தினரென்றும் பலர் கூறுகின்றார்கள்.

அக்காலத்திற் கணவனுடன் மனைவியை வைத்தெரிப்பது உண்மையாயின், பெருந்தேவி தன் கணவனோடு தீப்புக முற்சென்றபோது, மதுரைப் பேராலவாயார் முதலான சான்றோர்கள் அவளைத் தீப்புகாவாறு வேண்டித் தடுப்பார்களா? மேலும் கணவன்பாற் பேரன்புகொண்ட பெண்மக்கள் சிலர் உலக வாழ்க்கை யிறுதியில் நீத்தல் வேண்டிக் கைக்கொள்ளும் 'கைம்மை நோன்பை'ப் பற்றிப் "பல்சான்றீரே பல்சான்றீரே" என்ற பாவில் அத்தேவி தெளிவாகப் பாடியிருக்கின்றாள். ஆகலின், பழையகாலத்திற் கணவனோடு மனைவியை வைத்து எரிக்கும் வழக்கம் இத் தென்றமிழ்நாட்டில் இருந்ததில்லை என்பது அவள்பாடிய பாட்டால் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கா நிற்கும். ஆயினும் இக்கொடிய வழக்கம் ஆரியப் பார்ப்பனர் மலிந்த வடநாட்டில் மட்டுமே இருந்தது உண்மைதான். வடநாட்டுப்பார்ப்பனர் கணவனை யிழந்த மனைவியை அவனது சவத்தோடு உடன்வைத்துக் கட்டி உயிரோடு எரிக்கும் இரக்கமில்லாக் கொடுஞ் செயலைத் தென்றமிழ் நாட்டார் சிறிதும் பின்பற்றவில்லை யென்பதே கருத்திற் பதிக்கற்பாலது.

இனிப் பெண்மக்களின் அறிவு அவர்க்கு இயற்கையே யுள்ள காரணத்தால் அவர் முன்னிலையில் வெளிப்படப் புலப்பாடுந் தோன்றாதாயினும், காலம் வாய்த்தவிடத்து அஃது எவ்வகையினும் நடைபெறச் செல்லும் இயல்புடையது. 'பெண்மை' என்னும் சொல்லிற்குப் பொருள் "கட்புலனாகியதோர் அமைதித் தன்மை" என்றார் உரையாசிரியர் நச்சினார்க்கினியர். விருப்பம் என்னும் பொருளுடைய 'பெட்பு' என்னும் சொல்லடியாய்ப் பிறந்தது 'பெண்மை' என்பதாகும். அறிவு என்னும் தன்மை அமைதியாயிருக்கும் உள்ளத்திலிருந்து வெளிப்புலப்பட்டு உலகிற் பல நன்மைகளைக் கண்டறிவது. அறிவு தங்குமிடம் அமைதியான உள்ளமாகலின், அவ்வறிவையே அமைதியின் வடிவாம் 'கலைமகள்' என்னும் தெய்வப் பெண்மணியாக உருவகப் படுத்தினார்கள். இதனாற் பெண்மக்கள் தாம் அறிவுக்கு இருப்பிடமானவர்கள் என்பது விளங்கவில்லையா? கலைமகளே ஆண்மக்களெல்லார்க்கும் கல்வி அறிவு தருகின்றனள்.

இன்னுமிவர்கட்குப் பொருட் செல்வத்தை ஈகின்றவளும் திருமகளேயன்றோ? "தாயொடுசென்றாயின் தாதையைக் கூடி" என்று முற்றத்துறந்த பட்டினத்தடிகள் கூறியதற்கேற்ப ஆண்மக்கட்கு அருட் செல்வத்தை ஈகின்றவளும் எம் அம்மையே யல்லளோ?

இனிப் பெண்மக்களும் ஆண்மையின் மிக்கவராதலைப் பழையசான்றுகள் கொண்டு விளக்கிக் காட்டுவாம்.

"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொடு
உருவு நிறுத்த காமவாயில்
நிறையே அருளே உணர்வொடு
திருவென முறையுறக் கிளந்த
ஒப்பினது வகையே" என்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியதனால், ஆண்மைத் தன்மையும் ஆண் பெண் என்னும் இருபாலர்க்கும் உரியதென்பது பெறப்படும். இதன்

டாயிர ஆண்டுகட்கு முன்னமே, ஆண்மை மிக்க ஒரு தாயானவள் தன்மகன் போர்க்களத்து வெற்றி பெறாது புறங் காட்டி ஓடினான் என்பது கேட்டு மிகவும் மனநொந்தவளாய்ப் போர்க்களத்தில் என்மகன் இறந்துகிடத்தலைக் காணேனாயின், இன்றே அவன் பாலுண்ட என் முலையை அறுத்தெறிவேன் என்று கூறிக் கையில் வாளேந்தியவளாய்ப் போர்க்களஞ்சென்று, குருதி வெள்ளத்திற் படிந்து கிடந்த பிணங்களைத் தன் வாளாற் பெயர்த்துப் பார்க்கையில், தன் மகன் வேறு வேறாகிச் சிதைந்து இறந்து கிடத்தலைக் கண்டு அவள் அவனைப் பெற்றகாலத்து அடைந்த மகிழ்ச்சியை விடப் பன்மடங்கு மிக்க மகிழ்ச்சியை எய்தினள். இந் நிகழ்ச்சியைக் கண்டு வியந்து 'புறநானூற்றில்' காக்கை பாடினியார் என்னும் புலமை மிக்க பெண்மணியார்,

"நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்றோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படையழிந்து மாறினனென்று பலர்கூற
மண்டமர்க் குடைந்தனனாயின் உண்ட என்
முலையறுத் திடுவென் யானெனச் சினைஇக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களந் துழவுவோள் சிதைந்து
வேறாகிய, படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிதுவந்தனளே"

என்று வியந்து பாடினர்.

இன்னும், ஆண்மை மிக்க தாய் ஒருத்தி போர்க்களத்தில் தன் கொழுநன் நேற்று மாய்ந்தனன் மறுநாளே தான் மீண்டும் செருப்பறை கேட்டுத் தன் ஒரே மகனை அழைத்து எண்ணெயிட்டு அவன் குடுமியை வாரி, அவன் கையில் வேலை எடுத்துக்கொடுத்துச் செருமுகம் நோக்கிச் செல்க என்று அவனை வழி அனுப்பினள். இந் நிகழ்ச்சியைக்கண்டு வியந்தும் இரங்கியும் ஒக்கூர் மாசாத்தியார் என்னும் பெண்மணியார் 'புறநானூற்றில்'

“கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தகுமே
மேனாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை
யானை எறிந்து களத்து ஒழிந்தனனே
நெருநல் உற்ற செருவிற்கிவள் கொழுநன்
பெருநிரை விலக்கி ஆண்டுப் பட்டனனே
இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி,
வேல்கைக் கொடுத்து வெளிது விரித்து உடீஇப்
பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமக னல்லது இல்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே.” என்று பாடினர்.

ஆ! அக் காலத்துத் தமிழ்ப் பெண்மக்களின் கல்வித் திறத்தினையும் ஆண்மையினையும் உற்றுநோக்கிப் பயில்கையில் அவர்கட்கும் இக்காலத்துப் பெண்மக்கட்கும் உள்ள வேற்றுமை மலைக்கும் மடுக்கும் உள்ள வேற்றுமையை ஒத்தல் புலனாம். ஆகையால், பெண்மக்களைப் பொதுவாய் அறிவற்றவர்கள் ஆண்மை யற்றவர்கள் என்று கூறி இகழ்வாருரை பொருந்தாமை கண்டுகொள்க.



“நீங்கள் சம்சாரமோ ஈ அம்மை?”

“என்ன ஐயா இப்படிக் கேட்கிறீர்? அந்த அம்மாளுடைய வெள்ளைப் புடவையையும், தலையையும்—”

“கோபிக்கவேண்டாம்! இருவருக்கும் முகஜாடை ஒன்றாயிருக்கதே என நோக்கினேன்!”

# பள்ளிக்கூட ஆசிரியன்.

## THE SCHOOL MASTER.

["மாடர்ன் ரெவ்யூ" என்ற மாதாந்தப் பத்திரிகையின் 1924-ம் வருஷம் அக்டோபர் மாதத்திய சஞ்சிகையில் கவிஸ்ரேஷ்டர் ரவீந்திரநாத் டாகூரால் எழுதப் பெற்ற வியாசத்தின் முக்கியாம்ச மொழிபெயர்ப்பு.]

எனக்கு வயது ஐந்து ஆனவுடன் நிர்ப்பந்தத்தின் மேல் பள்ளிக்கூடத்திற்குச் சென்றபோது, இயற்கைச் சுகிர்தம், யதேச்சை, மனோரம்மியம் முதலியன இன்றி சுற்றியிருக்கும் இயற்கைக்கு மாறுபட்ட பாடங்களைப்படிக்க என் மனம் சம்மதிக்கவேயில்லை. அழகு மிகுந்த இயற்கையாகிய இப்ப இருக்கையை விட்டு ப்ரஷ்டம் பண்ணப்பட்டவர்களைப்போல் இருக்கவும், கூட்டில் அடைக்கப்பட்டு வெளிப்புறமிருந்து இரையிடப்பட்டு வளர்க்கப்படும் குருவியைப் போலவும் பள்ளிக்கூடமாகிய கூண்டில் அடைக்கப்பட்டுப் பிறரால் போதிக்கப்படும் கல்வியாகிய இரையையுண்டு வளரவும் நேர்ந்தது. நான் சிறுவனாயினும், பள்ளிக்கூடத்தார் என்னைக் கையாண்ட முறை என் மனதில் மானபங்க உணர்ச்சியை விசேஷமாய் உண்டாக்கியது.

நமது குழந்தைகள் குழந்தைகள் தாம் என்ற உண்மையை நமது கல்விமுறை நிராகரிக்கின்றது. பாவம்! நமது குழந்தைகள் வயதில் முதிர்ந்த பெரியாரைப்

போல் நடந்து கொள்வதில்லையென்றும், சிறு பிள்ளைத் தனத்தோடு கூடிய இரைச்சல் விஷமம் முதலியன அமைந்த நடத்தையையுடையவரா யிருக்கின்றனர் என்றும் தண்டிக்கப்படுகின்றார்கள். போதிக்கும் ஆசிரியவர்க்கத்தினர் அத்தகைய விஷமச் செயல்கள் குழந்தைகளின் இயற்கை இயல்பின் பாற்பட்டவை யென்பதையும், அமைதியின்றி எப்போதும் உழைக்கும் மனப்பான்மையோடு கூடிய நமது குழந்தைகள் இடைவிடாது ஓடியும் விளையாடியும் புதிய புதிய அநுபவங்களையும் விஷயங்களையும் தாமே தற்செயலாய் அடைவதே அவரது அறிவு விருத்திக்கேற்ற வழி என்பதையும், அறியாமலும் அங்கீகரிக்காமலும் இருக்கின்றனர். ஆகவே, இயற்கையும் ஆசிரியனும் யுத்தம் செய்யும் போர்க்களமாகின்றான் நமது குழந்தை.

நமது குழந்தைகள் தம் மனத்தை ஒரு வழிப்படுத்தியே கல்வி கற்க வேண்டுமென்பது நமது ஆசிரியரது சித்தாந்தம். ஆனால், இயற்கையின் கதி என்னவோ வெனில், அவர் தமது மனதைப் பல் வழிப்படுத்துதலினால் தான் குழந்தைகள் தமது அறிவை விசாலித்துக் கொள்ளுகின்றார்கள் என்பதே. பலப்போக்குகளிலும் நமது மனதைச் செலுத்தியே எதிர்பாராது அகஸ்மாத்தாய் புதிய விஷயங்களை நாம் நமது இளம் பருவத்தில் கண்டறிந்தோம். எதிர்பாராமையோடு கூடிய பிரமிப்பும் அதிசயமும் நம்மிடம் ஒரு திகைப்பை ஏற்படுத்தவே, அத்திகைப்பின் பான்மையினால் உலகத்தின்பாற் பட்ட விஷயங்களைத் தீவிரமாயறிந்து கொள்ள நமக்கு ஏதுவாயிருந்தது. நமது குழந்தைகளின் மனக்கிளர்ச்சிக்கும் ஊக்கத்திற்கும் புதுமை அவசியம். அத்தகைய புதுமையோடு விஷயங்கள்

தோன்றின், அவரது மனோ முயற்சி விசேஷமாய் ஓங்கி நிற்கும். ஆனால், தற்போதைய பள்ளிக்கூட நிர்மாணத்தில் குழந்தைகள் சாந்தமாய் ஆசிரியர் புகட்டுவதைச் செவி வாயாக நெஞ்சுகளனாக விடாது உள்ளத்தமைக்க வேண்டி-யிருக்கின்றது. இவ்வித நிர்ப்பந்தம் என்றால் சகிக்கமுடிய வில்லை.

குழந்தைப்பருவத்தில் முதன்மையாய்த் தோன்றுவது லக்ஷியமின்மையே. ஆனால் வயது முதிர்ந்த பருவத்திலோ வெனில் நமது வாழ்க்கையானது குறித்த சில லக்ஷியங் களாலான ஒரு பெரும் மூட்டை என்றே சொல்லவேண்டும். அவ் லக்ஷியங்களுக்கேற்ற விஷயங்களை நாம் அங்கீகரிக்கிறோம் மற்றவற்றைத் தள்ளியும் போடுகின்றோம். அவ்லக்ஷியங்களே நமது மனதை முழுதும் கவருகின்றன. மேலும் பிற வேண்டா விஷயங்களைப் புறக்கணிக்கவுஞ் செய்கின்றன. ஆகவே, ஒரு நதியானது குறுகிய ஒரு கரையைக் கடைப் பிடித்து ஓடிச்செல்வது போல, நாம் நமது லக்ஷியங் களுக்கேற்பவே நமது வாழ்க்கையை ஒரு வழிப்படுத்து கின்றோம். ஆனால் ஒரு குழந்தையோவெனில் சுகமாய் ஜீவிப்பதைத் தவிர வேறு தனக்கென ஒரு குறிப்பான லக்ஷியத்தை அடையப் பெறாதாகலின், தன்னைச் சுற்றி நிற்கும் எவற்றையும் புறக்கணிக்காது விஷயங்கள் யாவற் றையும் சர்வேசுயச்சையோடு கவனிக்கின்றது. ஆகவே, தனக்குக் காணக்கிடைக்கும் விஷயங்களை தனக்கு ஏற்றது இன்னது என வரையறுக்காது கண்டது கேட்டது யாவற் றையும் தன் மனத்தின் பாலமைத்துத் தனது அறிவை விருத்தி செய்கின்றது. இடறிவிழுந்தவன் மாணிக்கத்தைக் கண்டு களிப்பதுபோல் அடிக்கொரு உண்மையையும்கொடிக்

கொரு விஷயத்தையும் தானாகவே கண்டு களிக்கின்றது. மேலும், அதன் அறிவு விருத்தியின் பான்மை, ஒரு சிறுநீர் அருவி கற்களும் முட்களும் நிறைந்து கிடக்கும் இடத்தில் பாயும்பொழுது அவ்விடரின் காரணத்தினாலேயே அதன் வேகம் அதிகரிப்பது போல, குழந்தையும் தான் இடுக்கண் இடரின்பாற் படுவதன் காரணமாகவே தனது மனோ வலிமையும் வேகமும் அதிகரிக்கப் பெறுகின்றது.

நமது ஆசிரியனுக்குத் தனக்கென நிருமித்துக்கொண்ட ஒரு லக்ஷியமுண்டு. ஆகவே, தனது நோக்கத்திற் கிணங்க குழந்தையின் மனப்பான்மையையும் உருவாக்க எண்ணுகின்றான். மேலும் தனது நோக்கத்திற்கு முரண்படும் எல்லாவற்றையும் குழந்தையின் அநுபவத்திற்கு வரவொண்ணாது தடுத்தும போடுகின்றான். ஆகவே, இயற்கை, அதன் காட்சிச் சுகிர்தம் முதலியனவாகிய குழந்தையின் மனோ தர்மத்தைக் கவர்ந்து அதனை ரமிக்கச் செய்வனவற்றை ஆசிரியன் தனது கல்வி அட்டவணை யிலிருந்து அகற்றி, இயற்கையாகிய தாயின் இருதயத்தினின்றும் அதைப் பலவந்தமாய்ப் பறித்திழுத்துத் தனது பள்ளிக்கூடமாகிய பாழும் பந்தேகானில் அடைத்து வைப்பதோடு, அவ்விதம் செய்வதனால் குழந்தையின் அறிவை விருத்தி செய்யலாமெனவும் நினைக்கின்றான். ஏனெனில், வயதில் முதிர்ந்தவனாதலின், ஆசிரியன் தான் ஒரு விஷயத்தை கற்க நினைக்கின், வெகுவாய் ஆலோசித்துத் தான் படித்தற் கேற்ற விஷயத்தையும், உபகரணங்களையும், வசதிகளையும் தெரிந்தெடுத்துக் கொள்ளவேண்டியிருக்கின்றது. ஆகவே, குழந்தைகளுக்குக் கல்வி போதிக்கும்போது, அவ்விதமே தெரிந்தெடுக்கப்பட்ட குறிப்பான சில விஷயங்களையே

குழந்தைகள் கற்க வேண்டுமென்றும், அதற்கேற்ப கற்கு முறையையும் நிர்மாணித்துக்கொள்ளவேண்டும் என்றும் அவன் நினைக்கின்றான். வயது முதிர்ந்தோரது மனப்பான்மை குழந்தைகளின் மனப்பான்மையினின்றும் வேறுபட்டிருப்பதல்லாமல் அதற்கு நேர் விரோதமாயுமிருக்கின்றது என்ற உண்மையை அவன் நன்கு அறிகின்றானில்லை.

அது எவ்விதமிருக்கின்றதெனில் கனிக்கேற்பட்ட தொழிலைப் பூவின்மேல் பலாத்கரித்து, அதைச் செய்யச் சொல்வதுபோலிருக்கின்றது. பூவே தனக்கு அநுகுணமான சந்தர்ப்பங்களை எதிர் பார்த்தவண்ணமிருக்க வேண்டியிருக்கின்றது. தனது உள்ளிடையை ஆசிரியன் ஒளியும், காற்றும் படும்படி திறந்து வைத்துக்கொண்டு, தன்னிடமமைந்த தேனை எடுக்கவும் ஒரு பூச்சி உண்டு களிக்கவரும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்தவண்ணமிருக்கவேண்டியிருக்கின்றது. ஆகவே எதிர்பாராது நிகழும் அநுபவங்களோடு கூடிய ஒரு தனிப் பிராந்தியத்தில் பூ இருக்கின்றது என்னலாம். ஆனால், கனியோவெனில் தன்னிடமுள்ள விதை முதிர்வதற்கேற்ப தனது உள்ளிடையை மூடிவைத்துக் கொண்டிருக்கவேண்டும். தேனையுண்டு களிக்கவரும் பூச்சியின் வருகை பூவிற்குப் பெரியதொரு விசேஷசம்பவமாகும். ஆனால் கனிக்கோ அதனது பலாத்கார பிரவேசம் விசேஷ தீங்கையுண்டு பண்ணுவதாகின்றது. ஆகவே, வயது முதிர்ந்தோரது மனப்பான்மை கனியின் பான்மையை ஒத்தது. அவர்களுக்கு பூவின் பான்மையையொத்த மனப்பான்மையையுடைய குழந்தைகளிடம் சிறிதும் அநுதாபமில்லை. நமது குழந்தைகளின் மனதை இயற்கையின் மத்தியினின்

றும், பிரமிப்பு அதிசயம் முதலியன நிரம்பிக் கிடக்கும் பிராந்தியத்தினின்றும் அகற்றி அடைப்பதனால் உண்மையான மனோபக்குவ நிலையை யடையச் செய்யலாம் என்றே அவர்கள் எண்ணுகின்றார்கள். இவ்விதமான பெரியோரது கொடுமையினால் தான் நமது குழந்தைகள் எல்லாவிடங்களிலும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றார்கள். ஆகவே என்னுடைய நாற்பதாவது வயதில் சிலரை அத்தகைய அறிவிற் சிறந்த அறிவிலிகளின் நிர்ப்பந்தத்தினின்றும் விடுவிக்க வேண்டுமென்று எண்ணினேன். (தொடரும்).

A. சவரிராஜுலு நாயுடு, B.A., L.T., சித்தூர்.

# கொலை.

யாம் பெறுதற்கரிய விம்மானிடப் பிறவியைப் பெற்றதனாலடையவேண்டிய பலன் நல்வழியொழுகித் தீவழிநீங்கி அதனால் பிறவாமுத்திப் பேரின்பமடைய வேண்டியதேயாம். நல்ல செயல்களுட் டலை சிறந்தது எவ்வுயிர்க்கும் அன்பாயிருத்தலாகும். எனவே, தீச்செயல்களுட்டலை நின்றது (கொடுமைமிக்கது) அன்பின்றி அவைகளைக் கொலை செய்தலேயாம். இது எச்சமயத்தார்க்கு முடம்பாடாகும்.* இதை விளக்கற்கன்றே நம் பண்டைத் தமிழ்ச் சான்றோர் பலரும் கொலை, களவு, கட், காமம், எனக் கொலையை முன் வைத்தோதியதூஉமென்க. ஈண்டுக் கொலையென்று கூறுங் கூற்று மிருகம், பறவைமுதலிய விலங்கியற் பொருள்களைக் கோறலைக் குறிக்குமென வறிக. தாவரப் பொருட்களைச்

* ஒரு சில சமயம் மாத்திர மொழிய.

சேதித்தல் கொலையன்றோ வெனில், கொலையே. அங்ஙனங் கொலையேயானால், அதை நீக்கிய தென்னை யெனில், பாவங் குறைதலின். என்ன நியாயத்தாற் பாவங் குறையுமென்கிறீ ரெனில் கூறுவல் :—

தாவரங்கள் வெட்டுண்டுழியும் தளிர்த்தலானும், ஊறுபாடுகள் பிறிது பரிகரிப்பின்றி நீங்கலானும், வெட்டிப் பூமியில் நடுவதினாலேயே பல தாவரங்கள் பெருகுவதலானும், அறிவு ஒன்றே யாதலானும்; மற்றையுயிர்கள் வெட்டு முதலிய ஊறுபாடடைந்த விடத்து இறத்தலானும், சிறு ஊறுபாடடைந்துழியும் பரிகரிப்புப் பல வேண்டுதலானும், அறிவேற்றமாயிருத்தலானும் இன்ன பிறகாரணங்களானும் அதிக பேதமிருத்தலின் பாவமும் தாவரக் கொலையிற் குறைந்தும் மற்றையவற்றிலதிகரித்து மமையுமாறு கண்டு கொள்க. பாவங் குறையுமெனச் சொல்லினும்; அவற்றைச் சேதித்தலால் பாவம் அற்பமாவது வருதலின் அவைகளையுஞ் சோறல் தகுமன்றோ வெனில், தகுமன்றாயினும் அது இல்லறத்தார்க்கு ஒரு தலையான் வேண்டுவதாயிற்று. இக்கொலையான் வருமற்ப பாவமும் இவர்க்குத் தென் புலத்தார் பூசை முதலியவற்றானீங்கு மென்க. மற்றைய கொலையான் வரும் பாவமும் இவற்றானீங்காதோ வெனின், ஊன் தென் புலத்தார் பூசை முதலிய வற்றிற்குத் (தூய்தன்மையின்) தகுதியுடையதல்ல. ஆதலின் இக்கடாவறியார் மருட்கடா வென்க.

தாவரக் கொலையான் வரும் பாவம் அற்பமாயினும் அதுவுந் தம்மைச் சார்வது கூடாதென்றே துறந்தோர் சருகாதிகளையுண்டு வந்ததுமென்க. இது கிடக்க.

(தொடரும்)

PRINTED AT THE B. N. PRESS, MOUNT ROAD, MADRAS,

கெங்கெல்லாமோ அலைந்தார். பாரதகண்டத்திலுள்ள* க்ஷேத்திரங்களில் அவர் பார்க்காத இடமேயில்லை என்று சொல்லலாம். இங்ஙனம் அலைந்து பல பெரியோரின் உபதேசங்களும் பெற்றார். இப்பொழுது திருச்செந்தூருக்கு வந்து சேர்ந்தார். சங்கராம ஐயரும் அவர் அகமுடையாளும் எக்ஞசேஷையருக்கு வாக்களித்த பிரகாரம் அனந்த ராமனை சொந்தக் குழந்தைபோல் பாது காத்து வந்தார்கள். சீதாலக்ஷ்மி, அனந்தராமன் வந்து சேர்ந்த ஆறு வருஷங்களுக்குப் பின் பிறந்தாள். அவளுக்கு முன் இரண்டு குழந்தைகள் பிறந்து இறந்து போயின. இப்பொழுது, அவளுக்குப் பின் பிறந்த சிறுவன் ஒருவனிருக்கிறான். அனந்த ராமனுக்கு இச்செய்திகளெல்லாம் இன்று தான் தெரிந்தன.

எக்ஞசேஷையர் :—"சங்கராமா! என் சரஸ்வதி இன்னும் இறக்கவில்லை. சௌக்கியமாயிருக்கிறாள். அதனாலேதான் நான் மறுபடியும் இங்கே வந்தேன். காடுபரதேசியாய் அலைந்ததெல்லாம் போதும்"

என்று சொல்ல, அவருக்கு இன்னமும் சரஸ்வதி அம்மாளின் ஞாபகம் போகவில்லை என்று எண்ணி, சங்கராம ஐயர், "அதை யெல்லாம் ஏன் வீணாய் நினைத்துக் கொள்ளுகிறீர்? இருபது வருஷங்களாகியும் இன்னமுமா வருத்தம்?" என்றார்.

எக்ஞசேஷையர் :—"நான் சொல்வதிலிருந்து, நீ எனக்கு சித்தம் சரியாயில்லை என்று எண்ணுவாய்.

* பாரதகண்டம் = இந்தியா தேசம்.

இதோ பார்! நான் அவனைக் கூட்டிக் கொண்டு வருகிறேன்."

என்று எழுந்து செல்ல, அனந்தராமனும் சங்கராம ஐயரும் என்ன செய்வதென்று தெரியாதவர்களாய் அவர் பின் சென்றனர். எக்ஞசேஷையர், வடக்கு வீதியிலுள்ள ஒரு மடத்திற்குட் சென்று, பூட்டியிருந்த ஒரு அறைக்கதவை, "என் சரஸ்வதி! கதவைத்திற" என்று தட்டினர். என்ன ஆச்சரியம்! இருபது வருஷங்களுக்கு முன் இறந்து போனதாக எல்லோராலும் தகனம் செய்யப்பட்ட சரஸ்வதி அம்மாள் இதோ நிற்கிறாள்!

எக்ஞசேஷையர்:—"சரஸ்வதி! இதோ நிற்கிறானே இவனே நமது குழந்தை, அது சங்கராம ஐயர்."

'நமது குழந்தை' என்ற வார்த்தை காதில் விழவும், சரஸ்வதி அம்மாளுக்கு ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. உடனே அவனைக் கட்டி யணைத்து முத்தங் கொடுக்க முந்தினாள். சங்கராம ஐயர் முதலில் 'இதென்னக் கனவோ?' என்றெண்ணினர்! இப் பெண் சரஸ்வதியைப் போலிருப்பதனால் இவள் மேல் ஆசைப்பட்டுக் கூட்டிக் கொண்டு வந்து விட்டாரோ' எனத் திகைத்தார்.

எக்ஞசேஷையர்:—"சங்கராமா! உனக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கும். இவள் இறந்ததை நேரில் கண்டு தகனம் செய்த இருபது வருஷங்களுக்குப் பின் அவள் உயிரோடிருக்கிறாள் என்று சொன்னால், யாருக்குத்தான் நம்பிக்கைவரும்? உண்மையிலிவள்

அனந்தராமனைப் பெற்றெடுத்த என்னருமைச் சரஸ்வதியே. மற்றவை யெல்லாம நாம் அகத்திற்குப் போய்ப் பேசிக் கொள்வோம்.

என, எல்லோரும் சங்கரராம ஐயரின் வீடு வந்து சேர்ந்தார்கள். எக்ஞசேஷையர் வந்துவிட்டாரெனக் கேள்விப்பட்ட யாவரும் சங்கரராம ஐயர் வீட்டிற்கு வந்தார்கள்.

சங்கரராம ஐயர் :—"சேஷா ! நீ சொல்வதொன்றும் எனக்கு விளங்கவில்லையே. என்னென்ன நடந்ததென்று சொல்லு."

எக்ஞசேஷையர் :—"சச்சு ! உன் சங்கதியெல்லாம் விபரமாய்ச் சொல்லு."

சரஸ்வதி :—"நம் குழந்தை பிறந்த மூன்று மாதங்களுக்குப் பின், நான் வியாதியினால் கஷ்டப்பட்டு சௌக்கியமடைந்தேனல்லவா ? பின், ஒருநாள் இரவு நான் தூங்கிவிழிக்கும்பொழுது, என் வாய்க்குள் துணி திணிக்கப்பட்டிருப்பதாய்த் தெரிந்தது. உடனே துணியை யெடுக்கப் பார்த்தேன். என் கை கால்களும் கட்டப்பட்டிருப்பதாகத் தெரிந்தது. பின் நான்கு பக்கங்களிலும் பார்க்க, ஒரு குகையினுள் படுத்திருப்பதாய்த் தெரிந்தது. நான் பயப்பட்ட பயத்திற்குக் கணக்கில்லை. மேலும், குகையின் வாயிலில் ஏழு எட்டுப் பெயர்கள் காவல் செய்வதாகவும் தெரிந்தது. சிறிது நேரத்திற்குள், உயர்ந்த ஆடையாபரணங்கள் அணிந்த குரூர முகமுள்ள ஒருவன் வந்து, "அந்த பொம்பிளைக்கு முளிப்பு மருந்து குடுத்தாச்சா ?" என்று காவல் செய்வோரிடம் கேட்டான்.

"ஆமா எஜமான்! செத்த நாளிகைக்கு மின்னதாங் கொடுத்தோம்" என்றார் காவற்காரர். "முளிச்சிக் கிட்டாளான்னு பாரு" என்று வேறொருவன் சொல்ல, நான், அவன் சமீபத்தில் வருவானென்று நினைத்து, கண்களை மூடிக்கொண்டேன். அவன் என் சமீபத்தில் வந்து என்னை உற்றுப்பார்த்து, "இன்னும் முளிக்கல்லியே!" என்றான். உடனே ஆடையாபரணங்கள் அணிந்திருந்தவன், "எவிலே! மசக்கு மருந்து குடுத்து எம்புட்டு நாளியாச்சி; பன்னீர் கொண்ணாந்து தெளிங்கடா" என்று சொல்ல அப்படியே என் முகத்தில் பன்னீர் தெளித்தார்கள். நான் அப்பொழுதுதான் விழிப்பவள்போல் கண்களைத் திறந்துகொண்டேன். அப்பால் ஒருவன் என் கைகால்களின் கட்டுகளை அவிழ்க்க, நான் வாயிலிருந்த துணியை எடுத்துவிட்டேன். ஒவ்வொன்றையும் விவரிப்பானேன்? சுருக்கிச் சொல்லிவிடுகிறேன். அவர்கள், என்னைப்போல் வேறு நான்கு பிராமணப் பெண்களையும் கொண்டுவந்திருந்தார்கள். அவர்கள் ஒரு திருடர் கூட்டத்தாராம். நாங்கள் ஐந்துபேரும் அவர்களுக்கு நான்கு வருஷம் சமைத்துப் போட வேண்டுமாம். நாலாவது வருஷக்கடைசியில், எங்களைந்துபேரையும், புஷ்பவதியாகாத வேறு இரண்டு பிராமணப்பெண்களையும் அவர்கள் குலதெய்வத்திற்கு பலியிடப் போவதாயும், அவர்கள், பலியிடாமல் தீராதென்றும், ஆகையினால் நாங்கள் வருத்தப்படுவதில் பிரயோஜனமில்லையென்றும், அந்த இடத்தை விட்டுப்போக எவராலும் முடியாதென்றும், நாங்கள்

இருக்குமிடம் நாலுபக்கங்களும் மலைகளாற் சூழப்பட்ட பள்ளத்தாக்கென்றுஞ் சொன்னார்கள். நானும் மற்றப்பெண்களும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து மிரள மிரள விழித்துக்கொண்டிருந்தோம். தலைமைத் திருடன், தங்கள் கூட்டத்தாருக்குச் சமையல் ஆரம்பிக்கும்படி சமையலறைக்கு என்னையும் கூட்டிக்கொண்டு போகும்படி மற்றப் பெண்களிடம் சொல்ல, அவர்கள் என்னை சமையலறைக்குள் கூட்டிக்கொண்டு போனார்கள். நாங்கள் கண்ணீர் வடித்துக் கொண்டே வேலைகளைச் செய்து முடித்துச் சாப்பிட்டபின் திருடர்களுக்கும் போட்டோம். எங்கள் ஐந்துபேருக்கும் ஒன்றாக, ஒரு தனிப்படுக்கையறை விடப்பட்டிருந்தது. நாங்கள் அந்த அறைக்குட்போய் கதவைப் பூட்டி அழுதுகொண்டிருந்தோம். என் வருத்தமெல்லாம் அவரையும் குழந்தையையும் பற்றியே யிருந்தது. எங்களில் ஒரு பெண் என்னைப் பார்த்து, "அம்மா! உங்களைப் பார்த்தால், முன் எங்களுடனிருந்து இறந்துபோன சுப்புலக்ஷ்மி அம்மாளைப் போலவே யிருக்கிறதே. உங்களுக்கு அந்தப் பெயருடன் உங்களைப்போலவேயுள்ள யாராவது தெரியுமோ?" என்றாள். நான், "அப்படிப்பட்ட ஒருவருமே எனக்குத் தெரியாது" என்றேன். "அந்தம்மாள் பிறந்தது கொச்சியாம். வாழ்க்கைப்பட்டது திருநெல்வேலியாம். அந்த அம்மாளுக்கும் உங்களுக்கும் ஒரு வித்தியாசமுமில்லை. ஆனால் அந்த அம்மாளுக்கு பற்கள் கொஞ்சம் வரிசையில்லாமலிருக்கும். தாலும் வேறுமாதிரி, நிறம், உங்களைவிட வெளிறின

சிகப்பு; உங்களைவிடக் கொஞ்சம் நெட்டை. முதலில் உங்களைப் பார்த்தவுடன் சுப்புலக்ஷ்மி அம்மாளே பிழைத்து வந்துவிட்டார்களென்று எண்ணினோம்" என்றாள். நான், "அந்த அம்மாளுக்கு என்ன செய்தது?" என்று கேட்டேன்.

அவள் :—"அந்த அம்மாள், இரண்டுமாதமாக ஓயாத வயிற்று வலியினால் கஷ்டப்பட்டு இறந்து போனார்கள். அந்த அம்மாளுக்குப் பதிலாகத் தான் தங்களைப் பிடித்துக் கொண்டு வந்திருக்கிறார்கள் இந்தப் படுபாவிகள்." என்றாள்.

இவ்வாறு நாங்கள் நேரப்போக்கிற்காக ஒவ்வொருவரின் சரித்திரங்களையும் பற்றிப் பேசிக்கொண்டிருப்போம். ஒருநாள் சாயுங்காலம் நாங்கள் ஸ்நானஞ் செய்ய, பள்ளத்தாக்கில் ஓடிக்கொண்டிருந்த ஒரு ஓடைக்குப் போகும்பொழுது, பெரிய திருடனும் அவன் மனைவிகள் இரண்டு பெயரும் அந்த ஓடையின் பக்கத்திலுள்ள ஒரு கட்டிடத்தினுள்ளிருந்து பேசிக் கொண்டிருந்தார்கள். நாங்கள், அவர்கள் பேசுவதைச் செடி மறைவினின்று கேட்டோம்.

ஒருத்தி :—"என்னாங்க! இப்ப ஒருத்தி வந்திருக்காளேபாப்பாத்தி, அவா மின்னயிருந்தவள் கணக்காயிருக்காளே; இவள எங்கிட்டு பிடிச்சாந்தீங்க? மின்னால யிருந்தவளோட அக்கா தங்கச்சியா?"

திருடன் :—"இந்த விசாகத்துக்கு திரிச்சந்தூர் போயிருந்தோமில்லியா? அங்கிட்டு இவளக்கண்டு, இங்கிட்டு இருந்த செறுக்கி தான் ஒடியாந்திட்டாளுக்கு முன்னாபாக்க, இவா வேற ஆளாத் தெரிஞ்

ஒச்சி. அதப்பாத்து ஆச்சரியப்பட்டுக்கினு வந்திட்டோம். திருநவேலிப் பாப்பாத்தி செத்துப் போனுளா அதுமேல ஒரு ரோசனே தோணிரிச்சி எனக்கு. அதுமேல, செத்த பாப்பாத்திக்கு அந்த மருந்த உள்ளுக்குக் குடுத்து......."

மற்ருெருத்தி :—"அதென்னுங்க அந்த மருந்து?"

திருடன் :—"அந்த மருந்த செத்த மனிச்சர்வளுக்கு உங்களுக்குக் குடுத்திட்டா, எளுநாளாவட்டுமே—இப்பதாஞ் செத்ததுபோல இருக்கும். அது தான் அந்த மருந்தோட கொணம். பெறகு அந்தப் பொணத்த அலாக்கா ராவையிலே தூக்கினுபோயி, இப்ப வந்திருக்க பாப்பாத்தி விட்டை, 'பூட்டுத் தொறந்தான்' *வேருவச்சித் தொறந்து, இந்தப் பாப்பாத்தி மூஞ்சில மசக்க மருந்தை தடவி கைகால் வளே எல்லாம் கெட்டி தூக்கினு மின்னல ஓடச்சொல்லிட்டேன். அவங்க தூக்கினு போன பெறகு செத்த பாப்பாத்தி யிருக்காலியா அவா பொணத்த அந்தக் கட்டில்ல கெடத்திப்போட்டு, அதகண்டு பிடிக்கிருன் வளா என்னு பாக்க, ரெண்டுபேரு; நானும் ரவிச்சயும் சும்மாவளிப்போக்கங் கணங்கா, அடுத்த ஊட்டுத் திண்ணயில் துணியப்போட்டு மூடிக்கினு படுத்துக்கிட்டோம். ரொம்ப நேரமா ஒரு அசிவையுங்காணல. அதுமேல மறுபடியும் அந்த ஊட்டுக்கிட்ட போயி ரெண்டு சாமானுகள ஒண்ணுமேல ஒண்ணுத் தூக்கி ஓசகேக்கட்டும்ன்னு பெலமா போட்டோம். பாப்

* இவ்வேரை கதவில் வைத்தால், கதவு தானே திறந்து கொள்ளுமாம்.

பான் விளிச்சிக்கிறு வெளக்க பொருக்துனுன். வச்சிட்டானய்யா சத்தம் 'ஒ'ன்னு."

ஒருத்தி :—"எதுங்க! கண்டுக்கிட்டானுக்கும்?"

திருடன் :—"அவன் என்னுத்தக் காணுவான்? சொந்தப் பொஞ்சாதி செத்துப் போயிட்டாண்ணு அழுதான். 'கண்ணே' எங்குறன், 'பொண்ணே' எங்குறன், 'ஆ'ங்கிறன் அழுவுரான். அந்த எளவு பாப்பானுக பேஸ்ரது நமக்கு தெரியவா செய்து? எங்களுக்கின்னு பாவம்போல இருக்கு. ஆவக்கடாசில எல்லாருஞ்சேந்து பொணத்த சுட்டுப் பொசிக்கிப்பிட்டான்வ. பத்து பதுனஞ்சி காளக்கிப் பின்னுல அந்த பாப்பாத்தி பிரிசன் சந்நாசியாப் போயிட்டானும். இவ்வளவுதாஞ் சங்கதி. இன்னும இவளுவளெ நம்ம பெரியம்மனுக்கு பொலியிடனும்."

மற்ருெருத்தி:—"அவா வவுத்தவலியில செத்தாளே, அதுல நம்ம சாமி கொறகிற இருக்குமோ? இல்லன்னு, சாமிக்கி நேந்தது சாவுமா?"

திருடன்:—என்ன எளவோ? ஆரு கண்டா? மின்னுல நம்ம பெரிய அம்மஞ்சாமி பேசுந் தெய்வமாயிருந்திச்சி. இப்ப என்ன கோவமோ! ஆரு செய்த பாவமோ? வீணுல நம்பளட்ட பேச வளியக் காணல."

என்று பலவாறு பேசிக்கொண்டிருந்தார்கள். நாங்கள் ஸ்நானத்தைமுடித்துவிட்டு வரும்பொழுது, இவர்கள் பரதேசியாய்ப் போன வருத்தம் என் நெஞ்சை உலர்த்தியது. என்றாலும், அவன் செயலென்று அந்த முருகன்மேல் பாரத்தைப் போட்டு